தங்களுடைய "தத்துவத்தை" நிரூபிப்பதற்காக, ஏகாதிபத்தியம் உயிருடன் இருக்கும் வரையிலும் யுத்தம் தவிர்க்க முடியாதது என்ற பழைமையான அறிக்கையை மேற்கோள் காட்டினார்கள். * ஆனாலும், உண்மைக்குப் புறம்பானது வேறொன்றும் இருக்கமுடியாது. எல்லா யுத்தங்களும் தவிர்க்க முடியாதது என்று மார்க்ஸீய லெனினியம் பாடம் படித்ததில்லை. அவர் என்ன வற்புறுத்துகிறாரென்றால், "ஏகாதிபத்தியம் நீடித்திருக்கும் வரையில் "பொதுவாக சொல்லப்போனால் நாடுகளுக்கிடையே யுத்தம் தவிர்க்கப்படமுடியாது" என்பதே. * இந்த தவிர்க்க முடியாமை லெனின் வரையறுத்த அசமத்துவ வளர்ச்சி விதியிலிருந்து எழுகின்றது. இந்த விதியால் மாற்றமற்ற தன்மை, ஏகாதிபத்திய கட்டத்தில் முதலாளித்துவத்தின் இயல்பாலேயே நிரூபித்துக் காட்டியுள்ளது. இந்த விதி மறைந்து போகாது என்பது மாத்திரமல்ல; இரண்டாவது உலக யுத்தம் முடிந்ததின் பின்னிருந்து வளர்ச்சி அடைந்துள்ள நிலைமைகள் அதை தீவிரத்துடனும் செயல்படவைக்கின்றன. * இதனால், இக்கியம்பு பெற்றுக்கொண்ட அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளின் தலைமையால் ஆங்கிலோ-அமெரிக்க கூட்டணி தயாரிப்பதன் செய்துவரும் யுத்தமானது, சோவியத் அரசின் மீதும், ஜனநாயக நாடுகள் மீதும் தொடுக்கப்படும் அவர்கள் விரும்பும் யுத்தமானது, ஒரு உலக யுத்தமாக மட்டுமே இருக்கக்கூடியதும், எல்லா நாடுகளுக்கும் எல்லா மக்களுக்கும் சொல்லொண்ணா துன்பங்களையும், துயரங்களையும் கொடுக்கக்கூடியதுமாகிய இந்த யுத்தம் — இதனுடைய ஆபத்து மிகக் கொடியதாக இருந்தபோதிலும் — தவிர்க்கப்படக்கூடியும் என்பது மாத்திரமல்ல; பூரணமாகத் தடுக்கப்படவும் முடியும்; எல்லா மக்களுடைய நலன்களுக்காகவும் இந்த யுத்தம் தடுக்கப்படவேண்டும். **. ஒரு ஏகாதிபத்திய தத்துவம்:- ஒரு உலக யுத்தம் என்பதைத் தடுக்க முடியாது என்று அதற்பட்டுக் கூறுபவர்கள் சோஷலிஸ்ட் உலகமும், முதலாளித்துவ உலகமும் சமாதான பூர்வமாக ஒரே சமயத்தில் வாழமுடியாது என்று கூறுபவர்கள் தங்களை அதி தீவிரவாதிகள் என்று நினைத்துக் கொள்ளலாம். ஆனால்; யதார்த்தத்தில், அவர்களுடைய சித்தாந்தம் ஏகாதிபத்தியத்தின் கண்ணுள் தண்டனிட்டு நாணப்படுவதாகும். *. இந்த இரண்டு உலகங்களும் தவிர்க்கமுடியாமல் யுத்தத்தில் இறங்கித்தான் தீரும் என்று கூறும் அவர்களின் வாதத்தின் அர்த்தம், இரண்டு உலக அமைப்புகளுக்கும் பதிலாக, ஒரே ஒரு அமைப்பு இருந்தேயானால், முதலாளித்துவ அமைப்புடன் சமாதானத்தைக் கெடுக்கும் ஒரு அம்சமாக இருக்கும் என்று கூறும் ஏகாதிபத்தியத் தத்துவத்தை ஒப்புக்கொள்வதாக அர்த்தம். ஏகாதிபத்தியத்தின் முழு சரித்திரமே அந்தத் தத்துவத்தை பொய் என்று நிரூபித்துள்ளது; சோஷலிஸ்ட் நாடுகளும், ஜனநாயக நாடுகளும் சமாதானத்தை நிலைநாட்டுவதற்காக நிற்கின்றன என்பதையே மறுப்பதின் அடிப்படையால் அந்தவாதம் கூறப்படுவதாகும். *. மூன்றாவது உலக யுத்தத்தைத் தவிர்க்க முடியாது என்று கூறும் அவர்களின் தத்துவமானது, சோஷலிஸ்ட் நாட்டினுடையவும், ஜனநாயக நாடுகளுடையவும், வலிமை மிக்கதும் வளர்ந்து வருவதுமான சக்தியைக் கணக்கிலெடுத்துக் கொள்ளாத ஒரு தத்துவமாகும். இந்த சக்தியே சமாதானத்தைக் காப்பாற்றும் தனிப்பெரும் மிகப் பெரிய அம்சமாகும். தொழிலாள வர்க்கத்தின் பலம், புரட்சிகரமான இயக்கத்தின் பலம், சமாதானத்திற்காகவும், தேச சுதந்திரத்திற்காகவும் போராடுகின்ற மக்கள் எழுச்சியின் பலம் இவற்றைக் கணக்கிலெடுத்துக் கொள்ளத் தவறும் ஒரு தத்துவமாகும். *. இதனை ஒரு மூன்றாவது உலக யுத்தம் தவிர்க்கப்பட முடியாதது என்று கூறும் அவர்களின் தத்துவம் யுத்த வெறியர்களின் தாக்குதலுக்கெதிராக மக்களைச் செயலற்றிருக்கும் நிலைமைக்கு அழைத்துச் செல்லுகிறது. தேச சுதந்திரத்திற்கு ஆபத்தேற்படும் நிலைமையாலும், சமாதானத்திற்கான போராட்டத்திலும் மக்களை செயலற்றிருக்கும் நிலைமைக்கு அழைத்து செல்லுகிறது. * இந்த இரண்டு அமைப்புகளும் நீண்டகாலம் ஒரே காலத்தில் சமாதானமாக வாழமுடியும் அவர்களுக்கிடையான யுத்தம் தவிர்க்கப்படமுடியாத வாதமல்ல லெனின்-ஸ்டாலினுடைய இந்த அடிப்படையான தத்துவம் இன்னைய்பொழுதும் போலவே என்றைக்கும் உண்மையானதே அதுமட்டுமல்ல; இன்னைய்பொழுதைக் காட்டிலும் இன்றைக்கு மிகவும் அதிக உண்மையாகும். ஏனெனில் இன்று சமாதானம் காக்கும் சோஷலிஸ் ஜனநாயக அரசுகளின் வலிமை நாளுக்கு நாள் வளர்ந்து வருகிறது. சமாதான இயக்கம் மிகப் பெரிய வீச்சு உடையதாயிருக்கிறது. தொ. வ. உடையதும் தேசிய புரட்சிகர சக்திகளுடையதும் பலம் வளர்ந்தோங்கி வருகிறது. **. சமாதான இயக்கம் எல்லா யுத்தங்களையும் எதிர்க்கிறது:- மாலென்கோவ் பின்வருமாறு கூறுகிறார்: "ஏகாதிபத்தியம், யுத்தம் ஆகிய